# 97

## லட்சுமி

'என்னம்மா, நாளுங் கிழமையுமா என்னமோ மாதிரி உட்கார்ந்திருக் கிறாய்?' என்று சாந்தா தாயாரைக் கேட்டாள்.

'லட்சுமி ஞாபகம் வந்துவிட்டது எனக்கு. இன்று அவள் நம்ம வீட்டில் இருந்தால் எப்படி இருக்கும்? அவளை விட்டுட்டு வரவே எனக்கு மனசில்லை'.

'என்ன செய்கிறது? எவ்வளவு தூரம் இருக்கிறது! ரயிலாயிருந்தாலும் சார்ஜைப் பற்றி ஒன்றுமில்லை. ஐம்பது மைல் கட்டை வண்டியா யிற்றே! நடப்பாளா அவள்? அப்பாவை என்னவோ இந்தக் காட்டுக்கு மாற்றியிருக்கிறார்கள்'.

'உங்கப்பாவுக்குக் கூட அவளை விட்டு விட்டு வர மனசில்லை, வீட்டில் பிறந்து வளர்ந்தவளல்லவா'

'சோலை அவளைக் கண்போலக் கவனித்துக் கொள்வான். நீங்க ஒண்ணும் கவலைப்படாதீங்க என்று பூங்காவும் ஆயிரம் தடவை சொன்னாள்.

'நாம் அவளை விட்டு விடப் போகிறோம் என்று அவளுக்கு எப்படித் தான் தெரிந்ததோ–அன்று அவள் படுத்தினபாடு! அந்த அறிவு–'

'பசு மாட்டுக்கே அறிவு ஜாஸ்தி'

'இருந்தாலும் லட்சுமிக்கு அலாதி புத்தி. சில சமயங்களில் தப்பித் தவறி காலை மிதித்து விடுவாள். சட்டென்று காலை அழுத்தாமல் எடுத்துக் கொண்டு விடுவாள். பொங்கலன்று அவள் பண்ணுகிற ஆர்ப்பாட்டம்! 'ஹூம், ஹூம்!' என்று நிலை கொள்ளமாட்டாள். அவள் இன்று இல்லாதது எனக்கு வீடே வெறிச்சென்று இருக்கிறாப் போல் இருக்கிறது.'

'சோலையும் பூங்காவும் இன்று தடபுடலாக அவளுக்குப் பொங்கல் சமைப்பார்கள்!'

'அவா ஆயிரம் செய்கிறார்கள். நம்மனது கேட்கிறதா?' ஆச்சு தை பிறந்து விட்டது, மாசி பங்குனியில் நீ புக்ககம் போய்விடுவாய்; அங்கே நீ உன் அகமுடையானோடு எவ்வளவு சௌக்கியமாக இருந்தாலும் என்

*கிராம ஊழியன், பொங்கல் மலர், 1944*

அஞானம் விடுமா சொல்!'

'போடியம்மா – அதிருக்கட்டும், லட்சுமி தும்பை மட்டும் எடுத்துக் கொண்டு வந்தாயே எதற்கு?'

'தும்பைக் கொடுக்கப்படாது. அதுவுமில்லாமல் தும்பைப்பார்க்கிற போது எனக்கு லட்சுமியைப் பார்க்கிறாப்போல் இருக்கும். கன்னுக் குட்டி குஞ்சா அழகு உண்டோன்னோ அந்தமாதிரி நான் பார்த்ததே இல்லை. பாலைக் குடித்து விட்டு அது இங்கேயும் அங்கேயும் வாலைத் தூக்கிக்கொண்டு ஓடுகிறபோது பார்க்கணும்! முட்டுகிறதற்குக் கூடத் தெரிந்து விட்டதடி அதற்கு! வெள்ளை வெளேரென்று வெள்ளைக் காரச்சி மாதிரி. நல்ல சுழியாம், பால்காரன் சொன்னான். அது பிறந்ததும் தான் உங்கப்பாவுக்கு இந்த பிரமோஷன் – சம்பளம் ஜாஸ்தி. எப்பவாவது சரிப்பட்டபோது கொண்டு வந்துவிட வேண்டும்.'

'சோலை கொடுப்பானா?'

'சொல்லி இருக்கிறேனே!' 'சம்ரட்சித்து வைத்துக் கொள். குஞ்சா வுக்கு ஒரு வேலைப் பாலைவிட்டு, மாதம் ஐந்து அனுப்புகிறோம். நன்றாகத் தீனி போடு. மேய்ச்சலுக்கு விடாதே-வாடிக்கை இல்லை–' என்றெல்லாம் சொல்லி இருக்கிறேன்.'

'அஞ்சு மணிக்கு நீ தண்ணீர் காட்டப் போகா விட்டால்–அப்பா!'

'காட்டுகிறபோது என்ன சண்டை! மூக்கை ஜலத்துக்குள்ளே விட்டு தவிட்டையும் பருத்திக் கொட்டையையும் தின்றுவிடுவாள். ஜலம் குடிக்க வேணுமென்று நான் கலக்குவேன். என்னை ஏமாற்றி விடுவாள்!'

'லட்சுமி, உனக்கொரு பொண்ணு, வந்திடுவ, போயிடுவ என்கிறாய்?'

'சந்தேக மென்ன? புக்ககத்தில் இருக்கிறாள்!'

மாட்டுப் பொங்கலன்று மாலை இருட்டுகிற சமயம். வீட்டு வாசலில் சோலை லட்சுமியின் முன்பு பூஜை சாமான்களுடன் உட்கார்ந்திருந்தான். பண்ணை ஆளாக இருந்து கொஞ்சம் செட்டு கட்டுடன் வாழ்ந்து வீடு நிலம் வாங்கி இருந்தான். பூங்காவும் இரண்டு வீடுகளில் வேலை செய்து சம்பாதித்தாள். கொஞ்சம் பட்டண தினுசில் ஆடை யாபரணங்களை அணிந்திருந்தது அவள் இயற்கை அழகுக்குப் பொருத்தமாகவே இருந்தது.

'என்ன, இன்னும் நைவுந்தியம் கொண்டாரல்லே? என்று சோலை சத்தம் போட்டான்.

புன்னகை முகத்துடனும், மாலையில் தலை முழுகி புதிதுடுத்த பொலிவுடனும் பொங்கல் பானை, பாயசம் இரண்டையும் எடுத்துக் கொண்டு பூங்கா வெளியே வந்தாள். புருஷன் தீபாரதனை செய் வதைக் கண்டு 'நேவத்தியம் பண்ணிப் புட்டல்ல சூடம் கொளுத்திக் காட்டணும்!' என்றாள்.

சோலைக்குத்தான் செய்த பிசகை ஒத்துக்கொள்ள இஷ்டமில்லை. ஆண் தோரணையில் 'அல்லாம் தெரியும், இண்ணக்கி இப்படித்தான்

பண்ணனும். பொங்கலைத் தட்டுலே வை!' என்றான்.

பூங்கா வெங்கலத் தட்டொன்றைக் குச்சியால் அடித்துக் கொண்டு, 'பொங்கலோ பொங்கல்!' என்றாள்.

கன்றுக்குட்டி மிரண்டு ஓட்ட மெடுத்தது. தாய் அதைக் கண்டு தானும் நகர ஆரம்பித்தது. சோலை இரண்டையும் பிடித்துக் கட்டி விட்டு பூங்காவுடன் பிரதக்ஷிணம் செய்து கும்பிட்டான்.

'லட்சுமி வீட்டுக்கு வந்தவேளை இந்த வருஷம் சாமி புண்ணியத் துலே நல்லா விளைஞ்சுருக்கு!' என்றாள் பூங்கா.

'அம்மாவுக்கு இதுமேலே உசிரு, நினைச்சுக்கிட்டே இருக்கும்!' என்றான் சோலை.

'பொங்கலுக்கு லட்சுமிக்குப் பணம் அனுப்பிச்சிருக்கே, பொண்ணுக்கு அனுப்புற மாதிரி!'

'பொங்கல் ஆறிச்சா இல்லியா? இங்கே கொடு!'

'நான்தான் கொடுப்பேன்!'

'கொடேன். நீ கொடுத்தா பயப்படாமெ தின்னும். கொஞ்சம் தேங்காய் துருவிபோட்டா?'

'போடனும், இந்தாங்க இதைப் பிடியுங்க, வாரேன்!'

'தேங்கா துருவியெ நான் வேணா எடுத்துக்கிட்டு வாரேன்!' என்று சோலை உள்ளே போனான்.

பூங்கா அன்புடன் லட்சுமியைத் தடவிக் கொடுத்துக் கொண்டே 'என்னாடி வேணும், பொங்கலா, தாரேன், இரு அம்மா!' என்று கொஞ்சினாள்.

சோலை உள்ளே போனவன் கைவேலையுடன் மனவேலையும் செய்தான்போல் இருக்கிறது. துருவியை எடுத்துக் கொண்டு வந்து தேங்காய்மூடி ஒன்றை எடுத்துத் துருவிய வண்ணம் 'என்னா, சொன்னே, லச்சுமி வீடு நொளஞ்சவேளை' என்று மனைவி முகத்தைப் பார்த்து கேட்டுக் கொண்டே புன்னகை செய்தான்.

'இந்த வருஷம் நல்லா வௌஞ்சிருக்கின்னேன்.'

'அது மட்டுமில்லெ, அவ வந்த வேளை வீட்டுலேயும்–'

'போங்க!' என்று பூங்கா வெட்கத்துடன் சிரித்தாள்.

'என்ன சிரிக்கிறே அவ வந்த வேளே தான், இல்லாட்டி கட்டி. இத்தினி வருஷம் இல்லாமே–'

'சரித்தான், பொங்கல்லே போடுங்க, போதும்!' என்று பூங்கா புன்முறுவலுடன் சொல்லிய வண்ணம் தட்டைக் கையிலே எடுத்துக் கொண்டு வந்தாள்.

சோலை அவளை ஒரு நிமிஷம் பார்த்து விட்டு 'நீயும் லச்சுமி மாதிரித்தான்னா இருக்கே!' என்றான்.

●